


சிவமயம்

ஆலங்காடு

மகாபாட்சிமைதங்கிய

ஸ்ரீமாந் ரா. ம. சிதம்பரசெட்டியாரவர்கள்

மாணாக்கருளொருவரும்.

இராஜமன்னார்குடி நாஷனல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதருமாகிய

தி. குப்புசாமி ஐயரவர்கள்

இயற்றிய

# விநாயகர் கலிவெண்பா

விநாயகரிரட்டை மணிமாலை

ஸ்ரீ. வாதவூரடிகளிரட்டை மணிமாலை

இவை

திருவாரூர் போர்டு ஹைஸ்கூல் மாஸ்டரும்

சிங்கவனம் வித்துவானுமாகிய ப்ர்ம்மஸ்ரீ சுந்தரேசபாரதியார்

அவர்களாற் பரிசோதிக்கப் பெற்று

டைங்காநாடு வே. நாகரத்தினவையரவர்களால்

மன்னார்குடி சம்பக லெட்சுமி விலாஸ அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றன.

12—4—1912. அணா 2

உ

சிவமயம்

ஆலங்காடு

மகாமாட்சிமைதங்கிய

ஸ்ரீமாந் ரா. ம. சிதம்பர செட்டியாரவர்கள்

மாணுக்கருளொருவரும்.

இராஜமன்னார்குடி நாஷனல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதருமாகிய

தி. குப்புசாமி ஐயரவர்கள்

இயற்றிய

# விநாயகர் கலி வெண்பா

விநாயகரிரட்டை மணிமாலை

ஸ்ரீ. வாதவூரடிகளிரட்டை மணிமாலை

இவை

திருவாரூர் போர்டு ஹைஸ்கூல் மாஸ்டரும்

சிங்கவனம் வித்துவானுமாகிய ப்ர்ம்மஸ்ரீ சுந்தரேச பாரதியார்

அவர்களாற் பரிசோதிக்கப் பெற்று

வைபங்காநாடு வெ. நாகரத்தினமையரவர்களால்

மன்னார்குடி சம்பக லெட்சுமி விலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றன.

---

இதன் விலை 12—4—1912. அணா 2




உ

சிவமயம்

## சிறப்புப்பாயிரங்கள்

திருவாரூர் போர்டு ஹைஸ்கூல் மாஸ்டரும் சிங்கவனம் வித்துவானு
மாகிய ப்ர்ம்மஶ்ரீ சுந்தரேச பாரதியாரவர்கள்

இயற்றியது

ஏரம்பற் கன்பா ரிரட்டை மணிமாலை
வாரம் பெறுகலிவெண் பாமாலை—நேரிம்பர்ப்
பூமியிலொப் பில்லாப் புலவன்மறை யோன்குப்புச்
சாமியுள்ளன் போடிவனைந் தான்

ஆலங்காடு மகா மாட்சிமை தங்கிய ஶ்ரீமான் சிதம்பர செட்டியாரவர்கள்
மாணுக்கரும்

இராமனாதபுரம் ஸமஸ்தான வித்துவானும்

மன்னார்குடி பிண்டிலேகாலேஜ் தமிழ்ப் பண்டிதருமாகிய

**மகா-ா-ஶ்ரீ சர்க்கரை இராமசாமிப்புலவரவர்கள்**

இயற்றியது

பணிமாலை யணிந்தகண பதிமகிழும் படிகலிவெண் பாவிரட்டை
மணிமாலை யவன்றேளில் வனைந்ததுடன் றமிழறியும் வற்றுவைகை
யணிமாலை யாய்வளைந்த வாதவூரடிகளுக்கு மருமிரட்டை
மணிமாலை புனைந்தணிந்தான் றமிழுணர்குப் புச்சாமி மறைவல்லோனே

உ

சிவமயம்.






# விநாயகர் கலி வெண்பா.

திங்களணி செஞ்சடையாய் தெய்வத் திருநீற்றாய்
கொங்கவிழுங் கொன்றையணி குஞ்சரமே—யங்கொருநாள்

பூதரந் தன்னிற் புனிதமாம் பாரதத்தை
யாதரங் கொண்டெழுது மற்புதத்தோய்—காதலித்த

வன்பாளர் வேண்ட வவர்முன்னர்ப் போந்தருளி
யின்பார் வரமளிக்கு மேந்தலே—வன்பார்

மலமாயை கன்மமெனு மாமலத்தைப் போக்கிக்
குலமான ஞானங் கொடுப்போய்—நிலையான

வேதப் பொருளாயவ் வேதமுங் காணரிய
போதப் பொருளாய புத்தேளே—வாதப்போர்

கொள்ளும் பரசமயக் கூட்டத்துக் கெட்டாது
விள்ளுஞ்சை வத்தில் விளங்குவோய்—துள்ளுமொரு

சேலே யனவிழியாள் செய்ய சிறுநுதலாள்
பாலே யனையமொழிப் பைந்தொடியாண்—மேலாய

வள்ளி பயந்தோடி வண்ணக் குகன்றன்னை
யுள்ளி நயந்தணைக்க வும்பலுருப்—பொள்ளெனக்

கொண்டவண் முன்னே கொடுங்கர்ச் சனையோடு
பண்ட டவி தன்னிற் படர்ந்தோனே—கண்டறியக்

கூடாத பேருருவங் கொண்டோ யொருநாளும்
வாடாத மெய்த்தவமார் மாமுனிவோர்—பீடாரும்

நெஞ்ச வரங்கத்தி னின்று நடம்புரியுங்
கஞ்சத்தை யொத்த கழலிணையாய்—வஞ்சத்தா

லந்தரத்தி லோங்கி யவனிக் கிடர்தந்த
விந்தத்தின் வீறடக்கு மேலவன்றன்—நந்தலிலாக்

கும்பங் கவிழ்த்துக் குலிசன்செய் நந்தவனம்
வெம்பு நிலைமாற்று மேதக்கோய்—சம்புபதத்

தொண்டு குறையாத சோமாசி மாறனர்
கண்டு தெளியவவற் காண்பித்தோய்—விண்டுதருஞ்

செங்கமலத் தேவிற் சிருட்டித் தொழில் புரிந்த
பொங்கமலப் பன்னிருகைப் புத்தேளாங்—கொங்குலவுந்

தாரானை யன்புள்ள தம்பியாக் கொண்டருளுஞ்
சீராளா தெய்வ சிகாமணியே—நாராரு

மெய்யன்பர் நெஞ்சத்தின் மேவும் பெருநிதியே
பொய்யன்பர் காணாத போதகமே—நொய்யவெலி

மூவுலக வாட்சிக்கு மூவா வரம்பெற்ற
பூவுலகின் மேலாய பொற்பதியி—லாவலுடன்

வந்து பணிவாய் வணங்குமிரா மன்பாவம்
சிந்து மலர்ப்பாதச் செம்மலே—வந்து

சமுகந் தனினின்று தாழ்ந்தோர் தமக்குச்
சுமுகந் தனைக்காட்டுந் தோன்றா—லமிதஞ்சேர்

மாகதந் தங்குபவ மாறக் கிழித்தருளு
மேகதந் தங்கரங்கொ ளெம்மானே—பாகுதங்கு

மொப்பிலா நற்சுவைபோ லுள்ளுவா ருள்ளத்திற்
றிப்பியமாய்த் தித்திக்குஞ் செந்தேனே—தப்பி

னலம்போ தரநாளு நாகத்தா ரேத்து
மிலம்போ தரநாம மேய்ந்தோய்—உலம்பாத

வாரம் புரளு மழகார் புயமுடைய
வேரம்பா வென்னகமா ரெங்குருவே—சீரொன்றப்

போற்றுமடி யார்களைப்பைப் போக்கநறுங் கால்வீசித்
தோற்றுமழ கார்ந்தருளுஞ் சூர்ப்பகண்ணு—யேற்றமிகும்

வெற்பான் மழைதடுத்து வேலை தனிற்றுயிலும்
பொற்பார் தருந்திருமால் பூரித்தே—அற்பார

வாடு நடனமுகந் தன்முழி யீந்தருள்செய்
நீடு மருளுடைய நின்மலனே—பீடுபெறச்

செய்யுமுப தேசமொழி செய்யசெவி கொள்ளாத
மையுலவு சேற்கணுமை மங்கைதனை—வெய்யமொழி

சொல்லிமுனி வாற்சபித்த துய்யதிருத் தந்தைகரம்
புல்லுமறை நூல்பறித்துப் பொட்டென்று—வில்லுமிழுஞ்

செம்மணியை வீசுந் தெளிநீர்க் கடலினிடை
விம்மிதமாய் வீசும் விறலுடையோ—யெம்மிறையே

யெல்லா வினைக்கு மியானே தலைவனென
நல்லார் சபரி நயக்கின்றோய்—மல்லாரும்

வாரமார் நெஞ்சுடையான் வாரிசூழ் மண்ணுள்வோன்
சேரமான் மாவேறிச் செல்லுமுனஞ்—சீரமருஞ்

செந்தமிழ்நா டெய்யுமா தெய்வப் புலமையுடன்
வந்துதயஞ் செய்த வனப்புடையாண்—முந்துபுக

ழெளவைதனை வெண்கிரியி லார்வமுடன் சேர்ப்பித்த
செவ்வையுறு நீள்புழைசேர் செங்கரத்தோய்—கெளவையிலா

வாறுறு தத்துவத்துக் கப்பாலா யெட்டாமல்
வீறுகத் தோற்றும் விகிர்தனே—யேறேறு

மண்ணற்கு மம்மைக்கு மாறு முகவற்குங்
கண்ணற்கு மென்றனக்குங் கண்மணியே—யெண்ணற்கு

மேலாத வீரத்தா னேமனே நேராவோன்
றேலாத வாகையினன் றேன்முகத்தான்—மேலாய

வெவ்வுலகுங் காபு மியற்கையினன் வாரிவரும்
வெவ்விடமே நேரான வெஞ்சினத்தா—னௌவியமார்

தானவருக் கின்னுயிராய்ச் சஞ்சரித்தோன் றன்னுயிரை
வான முறச்செய்த வண்மையனே—மான

தெருக்கள் குளக்கரைகள் செய்ய வழிப்பாங்கர்
தருக்க ளடிமன்னிச் சார்ந்தோர்—வெருக்கொள்ள

விட்டிரா தாவலுடன் வேண்டும் வரமுதவு
மட்டறுத் தும்பையணி மார்பகத்தோய்—மொட்டுவிரி

கொக்கிறகு கூவிளங்கள் கொத்தாரு மந்தாரஞ்
செக்க ரொளிவாயுஞ் செவ்வரத்தை—மிக்கநறுஞ்

சாதியிரு வாட்சிமருச் சண்பகை முல்லையளி
கோதிமது வுண்ணுங் குறுக்கத்தி—யோதரிய

செங்கழுநீர் தேங்குவளை செவ்வந்தி புன்னைகங்
கொங்குலவு கோங்கஞ் குளிர்கரந்தை—துங்கமுறுந்

தாமரையு மத்தமொடு தண்ணு ரறுகம்புல்
வாம முடியில் வணைந்தருள்வோய்—கோமளஞ்சேர்

மோதகந்தீங் காப்பரிசி மொய்மணமா ரெள்ளுருண்டை
சீதமுறுஞ் செவ்விளநீர் தேங்கரும்பு—கோதில்

பருப்போ டவல்கடலை பாகு குழம்புப்பால்
விருப்பா ரதிரசமான் வெண்ணெய்—திருப்பொலியுஞ்

சென்னற் பொரிபயறு தீஞ்சுவையார் பூவிற்றேன்
கன்னற் பிழிந்த கவின்சாறு—தின்னற்கா

நாவ றருங்கனிக ணல்ல விளாங்கனிக
ளாவ றருகின்ற வற்புதஞ்சேர்—காவிலமர்

வாழை தருங்கனிகள் வண்ணப் பலாக்கனிகள்
மாழை தருங்கனிகண் மாண்மையுறுங்—கோழரைய

பூகமமர் தாற்றினுடன் பொற்பா ரிலேதேங்காய்
மோகமுடன் சந்நிதியின் முன்படைத்தே—யோதரிய

வேத முதற்பொருளே விண்ணவருக் கின்னுயிரே
போத முதவும் புகழுடையாய்—மேதகைய

வேய்போலுந் தோளி விமலே யுமைகுமரா
தாய்போ லருளுதவுந் தாழ்செவியாய்—பாயொளிசேர்

பொன்னருங் கிம்புரிப்பூண் பூண்டோய் மணிசேரும்
பன்னகை மார்த்த பருவரையாய்—கன்னகம்

மன்று கரும்பயில வாக்கியநற் சித்துருவந்
துன்று திருத்தாதை தோளேறி—நின்றருளிக்

கோல முடனிருந்து கொஞ்சி விளையாடுஞ்
சீல முறுஞ்சேயைத் திண்கரத்தாற்—ருலமதிற்

றள்ளி மகிழ்ந்தேறித் தானந்தத் தந்தையணி
வெள்ளை நிறமான விண்ணதியி—னுள்ளாழம்

பார்க்கத் துதிக்கைக்குப் பற்று திருந்ததனல்
வேர்க்க நொடியில் விரைவுற்றுத்—தீர்க்கரிய

வந்நீரை யள்ளி யயல்வீசி யாங்குறையு
நன்னீர மாமதியை நங்கொம்போ—டின்னேர

மொத்திடுவோ மென்றிணைக்க வொவ்வாத தால்வெகுண்டு
பொத்தென்றே யம்மதியைப் போட்டிறைவன்—சித்தம்

மகிழ விளையாடி வந்துமையாள் பாங்கர்த்
திகழ வமர்ந்தருளுந் தேவே—புகழவரு

முத்திக்குஞ் சித்திக்கு முன்னே னெனச்சூழ்ந்த
வெத்திக்கு மேத்து மியல்புடையாய்—பத்திக்கு

மெங்களுக்கு மோர்சிறிது மெட்டாதா லென்செய்வோங்
கொங்களிக்கு மாமதத்தாய் கோதில்லா—யிங்கொளிக்கா

தினனரு டந்தெங்க ளேதமறப் பாயென்று
தன்னெதிரி னின்றேத்தித் தாழ்ந்தோர்முன்—பன்னரிய

வண்கழல்க ளேந்துகரன் வந்தா னெனவொலிக்கக்
கிண்கிணியு நூபுரமுங் கிண்ணென்னக்—கண்களிகொள்

செஞ்சுடர் மார்பிற் றிகழு மணியார
மஞ்சுடர் வீசி யசைந்தருள—வெஞ்சலிலா

மாற்றுயரும் பொன்னாற்செய் வாகு வலயங்க
ளாற்றிசையு மிக்கவொளி நல்கவுய—ரேற்றமிகுங்

குண்டலங்க டோளிடறிக் கோல முடனிலங்க
வண்டர் தொழுமகுட மல்லோட்ட—மண்டொளிசேர்

புன்முறுவல் காட்டும் புனித முகங்காட்டி
வன்மையுறு மாகு மகிழ்ந்தேறி—நன்மையுடன்

வந்துமகிழ் கொண்டந்த வானோர்க்குங் கிட்டாத
முந்துமரு ளாலவர்க்கு முன்னரிய—நந்தலிலா

வெல்லா வுலகுக்கு மேய்ந்த வரசளித்து
மல்லா ரதிகாரம் வைத்தருளி—யொல்லாத

போதம் பெருங்கல்வி பொன்னுடை தந்தருளி
நாதம் படுமுரச நன்கொலிக்க—மாதம்பங்

கட்டுங் கொடிவாயிற் காவற் செறிமாட
மட்டின் றெனவளித்து மாறுது—முட்டின்றி

யிம்மை நிலமெல்லா மேய்வித்து நோய் விலக்கிச்
செம்மையுறுந் திர்க்காயுள் சேர்வித்தே—யம்மை

சிவலோக வாட்சித் திறத்தை யளிக்கும்
யுவராச குஞ்சரமே யோகத்—தவமாதி

செய்யும் வகையறியான் றீவினையு மிக்குடையா
னையு மனமுடையா னுயனையான்—வெய்யதுவாஞ்

சிற்றின்ப மேநாளுந் தேடித் திரிந்திடுவான்
கற்றின்பங் கொண்டுநமைக் காண்பரியான்—முற்றிவரும்

பொய்யுடையா னன்றுன போதமிலான் வீண்வறியன்
கையுடையா னல்வினைத்தைக் காதலியா—னுய்யுநெறி

யெண்ணு னிவனமக்கே னென்றென்னைத் தள்ளாமற்
றண்ணு ரருளுதவித் தாவறுத்துப்—பண்ணுரு

மெல்லாக் கலையு மிசையக் கொடுத்தருளிப்
பொல்லாக் கலியெல்லாம் போக்குவித்து—நல்லார்கள்

கூட்டந் தனிற்சேர்த்துக் கொல்லா விரதத்தின்
நாட்டந் தனைச்செலுத்து நண்புதவி—வேட்டுவரும்

பேயான் மிருகத்தாற் பீழைதரும் பூதத்தாற்
றீயான் மிகுநீராற் றெவ்வினத்தா—னோயினுற்

காதும் படையினத்தாற் கள்வரால் வெவ்விடத்தா
லோதும் பறவைகளா லுண்டாகுந்—தீதை

யடையாது நீக்கிப்பி னந்தனுர் னத்தின்
றடையான வைம்பொறியைத் தாழ்த்திக்—கடையாருஞ்

செம்பார் களிம்பாத் திகழா ணவந்தன்னல்
வெம்பா ததனுடைய வேரறுத்து—வம்பான

தீய வழிகாட்டிச் சென்மம் பலநந்து
வீய வழிசெய் வினைமுறுக்கிக்—காயவரும்

வெங்கடா வேறி வெருவும் படிமுன்வந்
தெங்கடர் போவதென வீர்த்துப்போய்ச்—சங்கடமே

தந்து வருத்துஞ் சமனுர் தொழிலிறவு
நந்து மதுவார் நளினத்தே—னைந்து

சலியா திருந்திடவுந் தாய்மாரு மீன்று
நலியா திருந்திடவு நான்றான்—வலியாவு

மோய்ந்துருவம் வெவ்வேறு பூசலே நேராக
மாய்ந்து பிறந்துவரன் மாறிடவு—மாய்ந்தவரைக்

கண்ணுண் டணிபோற் கலக்குமுன் சேவடிக்கீழ்
நண்ணும் வரமெனக்கு—நல்கு

(முற்றிற்று.)

---

உ

சிவமயம்

## விநாயகரிரட்டை மணிமாலை

### வெண்பா

பொன்பெறலாம் பேசரிய போதமுடன் கல்வியினின்
பம்பெறலாங் கிட்டாத பாரிலுண்டோ—தென்பயிலு
மஞ்சக் கரத்தாற் கரும்புதல்வ னைந்துகரன்
கஞ்சப் பதந்தொழுதக் கால் (க)

### கலித்துறை

காலங் கருதிக் கரும்பக டாளி கதித்தெழுந்து
சூலங் கரத்தினிற் கொண்டுயிர் கொள்ளத் தொடங்குமுன
மாலங் குடித்துவிண் காத்தருள் வோன்றரு மானைமுக
சீலங்கொ ணின்னகத் தொண்டர் குழாத்தெனைச் சேர்த்தருளே (உ)

### வெண்பா

அருளாளர் போலகமே யாதரங்காட்டுந்
தெருளாள ரல்லாரைச் சேர்ந்து—மருளாமற்
கந்தன் றமையன் கவினுர் தருமொற்றைத்
தந்தன் றிருவடியைச் சார் (ங)

### கலித்துறை

சாரா ரடியரை யன்புளங் கொண்டு தலைவணங்கார்
காராருங் கந்தரக் கண்ணுத லீன்ற கயமுகனை
யோரா ரவனடிப் பொற்றா மரையை யுளக்கண்கொண்டு
பாராரிப் பேயர் பிறந்துற லாகும் பயனெதுவே (ச)




**வெண்பா**

பயனின் மனிதரைப் பாடிப் புலவீ
ருயர்வெய்த லுண்டோ வுரைமி—னியன்மருவு
முந்தைவள முற்றுமுண்டா மும்மதமார் தந்திமுகத்
தெந்தைபதம் போற்றிசெய்வீ ரேல் (ரு)

**கலித்துறை**

ஏலங் கமழ்நறு மோதக மேந்து மெழிற்கரத்தான்
சீலங் குடிகொ ளடியா ரகத்தினைச் சேர்ந்துறைவோன்
காலங் கடந்த கருணா லயன்றுதிக் கைமுகத்தான்
கோலங்கொள் பாதந் துதிப்பவர்க் கேது குறைவிங்ஙனே (சு)

**வெண்பா**

குறையாமெய் யன்பரகங் கோயிலாக் கொள்வோய்
மறையா லறியா மணியே—கறையாரு
நஞ்ச மயின்றபிரா னல்கிய வாரணமே
தஞ்ச முனதுதிருத் தாள் (எ)

**கலித்துறை**

தாளா லுலகை யளந்தோன் றனக்குத் தகைமருக
ளாளா னவர்கெவ் வுலகிலு மாட்சி யளித்திடுவோன்
வேளான தம்பி தனைவேண்ட வள்ளியை வேட்க நல்குந்
தோளாத மாமணி போல்பவன் பாதந் துணைதுணையே (அ)

**வெண்பா**

துணையேநீ யென்பாற்குத் தோன்றாத் துணையா
யிணையே யிலாவளங்க ளீயுந்—கணையாகக்
கேசவனைக் கொண்டு புரங் கேடடையச் செய்தவெண்டோ
ளீச னளித்த விபம் (கூ)

**கலித்துறை**

இபமுகங் கொண்ட நிசாசர னுலகெய்துமிடர்
தபவவன் றன்னை யழித்திடு வோய்சிலர் தாரணியிற்
செபதப மாதி யியற்றுவர் நின்னைச் செபித்தறியார்
கபமுத லாகிய நோயே யிவர்க்குக் கதியென்பவே (ம)

### வெண்பா

கதியா நிலைகாட்டுங் காரணனைத் தூய
மதியார் சடையான் மகனைத்—துதியாதார்
காணானை யைங்கரனைக் கற்பகத்தை யெப்போது
நாணா தகமேநீ நாடு (௰௧)

### கலித்துறை

நாடும் பிரணவச் செம்பொரு ளானவ னம்பிறப்பை
வீடும் படியருள் செய்பவன் பல்வகை வேதங்களுந்
தேடும் படிவந் தெரியா துழலத் திகழ்ந்தருள்வோன்
கூடும் புகலூருக் கொண்டபி ரானெனிற் கோதறுமே (௰௨)

### வெண்பா

அறுகா லருச்சனைசெய் யன்பர்கட் கெஞ்ஞான்றுஞ்
சிறுகா வளமுதவுந் தேவன்—குறுகாத
சீராளன் செம்பவளச் செம்மேனி யான்கொன்றைத்
தாராள னெங்க டனம் (௰௩)

### கலித்துறை

தனத்தைப் பெரிதெனப் பாராட்டி யென்றுந் தவித்திடுமென்
மனத்தைத் திருப்பியுன் சேவடி சேர வரந்தருவாய்
வனத்தைத் தரித்து வனத்திற் றுயில்புரி மான்மருகா
கனத்தைப் பொருவ வருண்மழை சிந்துங் கணபதியே (௰௪)

### வெண்பா

பதியா யமர்வானைப் பற்றற்றார் பற்று
நிதியா யமர்ந்த நிதியை—நதியாரும்
வேணியனை யைங்கரனை விண்ணவனைக் கோடேந்து
பாணியனை நெஞ்சே பணி (௰௫)

### கலித்துறை

பணியா துனைத்தினம் பாடாது நின்று பழிசுமந்தேற்
கணியாய நின்னருட் பெற்றிடுங் கால மமைவுறுமோ
துணியா கியமதி பூண்டவ னீன்றரு டுய்யதிரு
மணியாகி வேத முதற்பொரு ளாகிய மாதங்கமே (௰௬)

### வெண்பா

மாதவரை யாளு மாமுகனின் பாதத்தை
யேதிதென வெண்ணி யிகழ்கொடிய—பாதகரைக்
இட்டாது நிற்பதற்குக் கேட்கின்றே னோர்வரநான்
றட்டாது நீயெனக்குத் தா (௧௭)

### கலித்துறை

தாதை புதலிய மாங்கனி வாங்குஞ் சதுருடையான்
றீதை யெவரு மடையாது காக்குந் திருவருளான்
கோதை யசைகின்ற தோளுடை யானொரு கோதுமிலான்
மேதையர் போற்ற வவர்க்கருள் வானெங்கள் விண்ணவனே (௧௮)

### வெண்பா

விண்ணவர்க ளெல்லாரும் வேண்டித் துதிசெய்யும்
பண்ணவனு மைங்கரன்றன் பாதத்தைக்—கண்ணார
முப்போதுங் கண்டு முதியபணி செய்பவருக்
கெப்போது மில்லை யிடர் (௧௯)

### கலித்துறை

இடரைத் தினந்தரு மைம்பகை நீக்கி யெனையடியார்க்
கடலைத் தருந்திருத் தாமரைத் தாட்கன்ப னுக்குவையோ
கடலைத் திருப்பியுட் கொண்டவன் கொண்ட கமண்டலநீர்
புடவித் தலைவந் துலகுய்யச் செய்யுமெம் புண்ணியனே (௨௰)

(முற்றிற்று.)

---

உ

சிவமயம்

## வாதவூரடிக ளிரட்டைமணிமாலை.

### வெண்பா

திருவாத ஆரில்வருந் தேவே தொடருங்
கருவாரா நன்னெறியைக் கண்டோ—யொருவானே
னுள்ளத்திற் றங்குவோ புன்னன்பி னையனையேற்
கெள்ளத் தனையேனு மீ (௧)

### கலித்துறை

ஈசன் பசுபதி யெம்மான் பரம னிணையடியைப்
பூசனை செய்தருள் வெள்ளந் திளைத்த புனிதமுறு
நேசனை வாதபுரியானை விண்புகழ் நின்மலனைத்
தேசுறு வள்ளலைப் பாடின்வெம் பாவஞ் சிதைந்திடுமே (௨)

### வெண்பா

மேவார் பகையில்லை மேலா ருறவுண்டு
நோவா னவையெல்லா நுண்பொடியாங்—காவாரு
மாகனக மாளிகைசூழ் வாதவூ ரான்பாதக்
கோகனக மேத்துபவர்க்கு (௩)

### கலித்துறை

குணங்களி லேநெஞ்சின் மேவி யிருளைக் குமைத்தெழிலார்
தணவென்று மில்லருண் மாமழை பெய்துறத் தங்கியவா
லெணமுடி யாத வளமிக வோங்கி யிலங்குமலர்த்
துணர்மலி தண்டலை சூழ்வாத வூரன் றுணைப்பதமே (௪)

### வெண்பா

பதறித் தனந்தேடிப் பாரிற் சுழன்று
விதனப் படுநெஞ்சே மேவி—மதனற்காய்
பித்த னடியடைந்த பேறுடையான் வாதவூர்ச்
சித்தன் றிருவடியைச் சேர் (௫)

### கலித்துறை

சேரும் பவப்பிணி தீர்ந்துய லாகுந் திகழ்புலவீர்
சீரும் புகழு மிகுவாத வூர்வருஞ் செய்தவத்தா
னீரும் பிறையு மணிந்தான் பதயுக நெஞ்சிருத்தி
யாரும் பனுவற் றொடைசூட்டு மன்பனுக் காட்படினே (௬)

### வெண்பா

படிறன் குணமிலான் பாதகனு மென்றே
யடியனை நோக்கா தகற்றி—விடினுநீ
வாமமலி வாதவூர் வள்ளலே யுன்னுடைய
நாமமற வாதென்ற னா (௭)

### கலித்துறை

நாதா வெனைப்புரந் தாண்டுகொள் வாயென நக்கனெழிற்
பாதாம் புயப்புணை யாற்பவ நீந்தும் பரிசுடையான்
மேதாவி வாத புரியண்ணல் பேரருண் மேவியவர்
வேதா முதலிய விண்ணோர் பணிசெய மேவுவரே (௮)

### வெண்பா

ஏழுலகுமேத்து மியல்வாத ஆரானைத்
தாழுமவ ரெஞ்ஞான் றுந் தாரணியில் —வீழு
நவமான வின்பமுற்று நண்ணுவர் மேலைச்
சிவலோக வாட்சித் திறம் (௯)

### கலித்துறை

திறம்பாத பந்திப் பெருங்கடன் மூழ்கிச் சிவவடிவா
யுறும்பா வலனைத் திருவாத ஆரனை யுத்தமனைப்
புறம்பா மதவிருள் சீக்குங் குரவனைப்பூசித்தவர்
குறும்பாய மும்மலத் தீப்பிணி யின்றிக் குலவுவரே (௰)

### வெண்பா

குலவுவிடை யேறிவருங் கோமானை மாவி
ணிலவிவரச் செய்தானை நீர்சூ—ழுலகமெலாஞ்
சிந்திக்க நின்றானைச் சீர்வாத ஆரானை
வந்திக்கப் போமே மறு (௰௧)

### கலித்துறை

மறுக வரும்பவ சாகர நீங்கும் வழிதெரித்துச்
சிறுகு மதிபுனை வேணிப் பகவன்பொற் சேவடியைக்
குறுகி வரம்பிலின் பந்தனின் மூழ்குங் குணம்படைத்த
முறுகிய வன்புடை யான்வாத ஆரெனின் முத்தியுண்டே (௧௨)

### வெண்பா

உண்டுறங்கி நாள்போக்கி யுய்யும் வகையறியா
மிண்டனென நீக்கியெனை விட்டாயேல்—மண்டிசையோ
டங்குரித்தோய் வாதவூ ரத்தா வினிநாயே
னெங்குரைப்பேன் வேறுபுக லின்று (௧௩)

### கலித்துறை

இன்றமிழ்ச் செந்தொடை யாலொளி செய்யு மெழிற்கனக
மன்றவன் சேவடிப் பங்கய மேத்திமலமகன்று
துன்றிய நல்லருள் வீட்டினை மேவித் துலக்கமுற
நின்றவன் மாமறை யோன்வாத ஆரனென் னெஞ்சத்தனே (௧௪)

### வெண்பா

தன்வசத்தி னீங்கிமலத் தாக்கற் றெளிருபர
மன்வசமாய் நின்றதிரு வாதவூர்—மன்னதியுஞ்
சீதப்பால் வெண்மதியுஞ் சேர்சடையா னைப்புகழு
நீதப்பா வுக்குண்டோ நேர் (கரு)

### கலித்துறை

நேரிய ஞாதி யரசர் திறைதர நீளுலகைச்
சீரிய வாட்சி புரியரி மர்த்தனச் செம்மலுக்குக்
காரிய ஞானி யவற்கருள் செய்யுங் கலைக்கடலா
மாரியன் வாத புரியான்றன் சீரை யளப்பரிதே (கசு)

### வெண்பா

தேவாதி தேவன் சிவன்சே வடிநிழலை
யோவா தடைந்த வுயர்புலவா—மூவாத
காராரும் வாதவூர்க் கர்த்தா வறியேன்பாற்
சாராதோ நின்னோக்கஞ் சற்று (கஎ)

### கலித்துறை

சற்றுங் குறைவில தாகிய நேமங்கொள் சற்பத்தியைப்
பெற்றுயர் வெய்து நினதருள் யானும் பெறவிரும்பி
யுற்றன னுன்னெணங் கண்டிலன் காப்பது முன்கடனாற்
கற்றவர் வாழுந் திருவாத ஊர்வருங் காவலனே (கஅ)

### வெண்பா

காவலராய் வாழ்ந்தாலுங் காலாந் தரமுண்டாற்
பூவுலக வாழ்க்கைவெறும் பொய்நெஞ்சே—தேவரெலா
நேயமுடன் வந்திக்க நின்றுன்சீர் வாதவூர்
நாயகனே வாழ்வென்று நம்பு (ககூ)

### கலித்துறை

புன்னெறி யெய்திய புத்தரை வாதப் புயற்படுத்தி
மன்னவன் கன்னிக்கு மூகையை மாற்று மகிமைபெற்ற
முன்னவன் வாத புரியண்ணல் பத்தர்க்கு முன் வரவு
[illegible] வி வரும்பக டேறி யுறுஞ்சமனே (உய)

(முற்றிற்று.)